ராம. சொ திருநாவுக்கரசு,
கா. முத்துப்பட்டணம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.
வெற்றிவேலுற்றதுணை.

பலவான்குடிக்

# குமாரவிநாயகர் பதிகம்

குன்றக்குடிக்

# குமரபஞ்சகம்.

---

காளையார்கோவில்
வேதாந்தமடாலயம்
ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பலசிவம் அவர்கள்
இயற்றியன.

---

பலவான்குடி
"சிவநேசன்" அச்சியந்திரசாலை,
விபவ ஆண்டு-தைத்திங்கள்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சிறப்புப்பாயிரங்கள்.

### ஸ்ரீ வன்றேண்டரவர்கள் மாணுக்கர் காரைக்குடி ராம. சோ. சோக்கலிங்கச் செட்டியாரவர்கள் இயற்றியன.

மாதகர வித்தையெனு மாண்முதல மறைமுதனூல்
வயக்கும் வாய்மைப்
போதசபைத் தாதைதாய் போற்றிளைய குமானுடன்
பொருந்த மேவிச்
சீதவளம் பலநிறைந்து திகழ்பலவா னவர்குடியிற்
செல்வங் கல்வி
யாதிநலன் முழுதருளி யமர்குமர விநாயகன்சே
வடிகள் போற்றி. 1.

பரவுதமிழ்ப் பதிகமுஞ்சேர் பாவுதிரு மயூரகிரி
பானும் வேதம்
ஒருவில்சிவ சுப்ரமணி யோமெனநன் றெடுத்தோது
மொருவற் போற்றிக்
குருவளமிக் கொளிர்குன்றக் குடிக்குமர பஞ்சகமாங்
குலவு நூலும்
இருவருமேற் கொண்டருளி யின்புறமெய் யன்பின்வனோங்
திசைபெற் ருனல். 2.

மிளிர்வேத சிரப்பொருளை மிகத்தெளிந்தென் றுரைநூன்முன்
விவேகித் தேமற்
றுளதாய வகம்பரமென் ருேதுமதன் ருற்பரிய
முள்ள வாதேர்ந்
தளியாருஞ் சித்தாந்த அருணிலையே தெருணிலையென்
றதையே பற்றிப்
பளகீர்பு திகழ்பொன்னம் பலசிவமாந் தவமேவு
பாவ லோனே. 3.

## சிவநேசன் பத்திராசிரியர்

### திருவாளர்: ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் இயற்றியன.

சீரார் பலவான் குடிநகரிற்
 றிகழுந் திருவா சகமடத்திற்
சீரா ரடியார் தினம்பரவுஞ்
 செய்ய குமார விநாயகர்க்குச்
சீரார் பதிகம் புனைந்தணிந்து
 செவ்வேள் குமர பஞ்சகமும்
சீரார் புகழ மகிழ்ந்தளித்தான்
 திறல்சேர் பொன்னம் பலசிவமே. 1

சிகரமெனத் திகழ்தருமிவ் விருநூலுஞ் செய்தருளி
யகராதி மாலையொன்று மாறுமுகற் கணிந்ததனால்
நிகரில்பெரும் புகழ்படைத்தா னின்மலசின் மயமான
பகாரிய பதிநிலைதேர்ந் திலங்குபொன்னம் பலசிவமே. 2

---

### மதுரைத் தமிழ்ச் சங்க மாணவர் சித். ஸ்ரீ நார்ரயண சுவாமிகளால் இயற்றப்பட்டன.

#### நேரிசை வெண்பா.

சந்தமுற நெற்கழனி தங்குபல வான்குடிவாழ்
நந்தங்கு மாரவி நாயக—சந்தம்
பதிபதிக முங்குன்றைப் பண்ணவனு மன்பர்
கதிகுமா பஞ்ச கமும். 1.

சொற்பொருளேக் கங்கள் துலங்கவுரைத் தானவனைக்
கற்பகமா மென்னக் கவிபுனையும்—விற்பனனுந்
தன்னைநிகர் கானவே தாந்தமடத் தேவிளங்கும்
பொன்னம் பலசிவமென் போம். 2.

திருவுங் கலையுந் திறமும் மனையும்
விரவுங் கிளையும் மிளிர்வும்—பரவுமதி
நற்புதல்வ ருஞ்சிறப்பும் நண்ணுவரா லவ்விரண்டு
பொற்பனுவல் பாடிற் புரிந்து. 3.

நண்புடையான் அன்புடையான் நல்லவர்தங் கூட்டுடையான்
பண்புடையான் மிக்க படிப்புடையான்—பெண்புடையிற்
கொண்டவனைக் கொண்டவளக் கோதறுபொன் னம்பலப்பேர்
கொண்டசிவத் திற்கிணையார் கூறு. 4.

---

## உமையாள்புரம் தமிழ்ப் பண்டிதர் திருவாளர்
## உ. ரா. சாமிநாத பிள்ளையவர்கள் இயற்றியன.

### கட்டளைக் கலிப்பா.

*கட்ட ளைக்கலிப் பாரளி கிண்டியுண்*
*கமல வாவி நிறைபல வான்குடிக்*
*கட்ட ளை*க்கலிப் பாதக மோட்டிடுங்*
*கருணை வள்ளல் கவிஞர்கள் பொன்னுரை*
*கட்ட ளைக்கலிப் பாரும்விண் ணும்புகழ்*
*கந்தன் பேர்மு னுகந்திடுந் தந்திக்குக்*
*கட்ட ளைக்கலிப் பாவிற் பதிகநற்*
*கண்டு தேன்மொழி கொண்டு புனைந்தனன்.* 1

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

*புனைந்தவன்ற னருளாலே புகழ்க்குன்றக் குடிசெந்திற்*
*பொருந்தும் வேளை*
*நினைந்தவமெ லாமொழிய நேயமுற வானந்த*
*நீரா னெஞ்சம்*
*நனைந்தவச முறவினிய பாடல்கள்பற் பலவாகு*
*நயங்க டோன்ற*
*வனைந்தவன்றன் பேருமவன் மதித்திறமுங் கவித்திறமும்*
*வழுத்தக் கேண்மின்* 2

### கட்டளைக் கலித்துறை.

*முன்னம் பலவன் முடித்தமுக் கண்ணுடை மூர்த்தியுறை*
*தென்னம் பலவின் பொழில்சூழுங் கானத் திருநகரில்*
*இன்னம் பலபிறப் பெய்தா நெறிதெளிந் தெண்டவஞ்செய்*
*பொன்னம் பலசிவ மென்னும் புலவர் புகழ்மணியே.* 3

சிவமயம்
திருச்சிற்றம்பலம்.
வெற்றிவேலுற்ற துணை.

# பலவான்குடிக்குமாரவிநாயகர் பதிகம்.

## கட்டளைக் கலிப்பா.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியதோ
ரும்ப னேயும்பர் கும்பிடு நம்பனே
சொலவொ ணுத்திரு யானைமு கத்தனே
தூய னேமறை பாடிடும் வாயனே
கலக மாமிப் பிறவிக் கடலைநான்
கடப்ப தற்குன் னடிப்புணை யீகுவாய்
வலமை யார்செல்வர் சேர்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே 1.

பாரத் தந்தி தலைபொரு கொங்கையைப்
பகிர்ந்த தந்தி யனேரு மிடையினைச்
சேரத் தந்தி கழுமுணர் வானது
சிதையத் தந்தி ரமதுசெய் தீயர்பால்
நாரைத் தந்தி னலைப்புரி யாமலே
நலத்தர் தந்தி ரமாநண்பை நல்குவாய்
வாரத் தந்தி கழும்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே 2.

---

1. வல்லமை—வலமையென இடைக்குறையாயிற்று.

2. பாரத்தந்தி—கனத்தயானை; பொரு—ஒத்த; பகிர்ந்த—பிளக்கப்பட்ட; தந்து—நூல்; இயல்— தன்மை; நேரும்—ஒக்கும்; சேர—சேர்தற்பொருட்டு; தந்திரம்—உபாயம்; நார்—அன்பு; இனல் (இன்னல்) துன்பம்; நலத்தர்தம்—நல்லவர்களுடைய; திரம்—நிலைபெற்ற; மா—பெரிய; வார்—நீண்ட; (பெரியஎன்றபடி) அத்தம்—செல்வம் "வாழுந் தந்திமுகங்கொண்ட வள்ளலே" யென்றும் பாடங்கொள்ளலாம்.

பாட்டி லேயென்ற ஞவும் நினதிரு
 பதத்தி லேயென்ற னெஞ்சு மறிஞர்தங்
கூட்டி லேயென்றன் கூடு மிருந்திடக்
 குளத்தி லேகண் படைத்தி யருள்புரி
ஆட்டி லேயுளங் கொண்டவன் றேன்றலே
 யாகி லேமனங் கொண்டம ரேந்தலே
மாட்டி லேமிகு மம்பல வான்குடி
 வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 3.

அரைப்ப ணந்தனைக் காட்டிம யக்கியே
 ஆயி ரம்பணத் தைக்கவர் மாதரைத்
தரைக்கண் டோன்றெம தூதரென் றுஞ்சற்றுந்
 தயவி லாக்கொடும் பேய்களென் றுந்தள்ளி
வரைப்பெண் டந்தவென் ஞயக னின்னையே
 மகிழ்ந்த ணைந்தின்பங் கொள்ள வருளுவாய்
மரைக்கு ளங்கள் மலிபல வான்குடி
 வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 4.

வீறு கொண்டவே தாந்த நெறியையும்
 விளங்கு கின்றசித் தாந்தத் துறையையும்
நீறு கொண்டசெம் மேனிய னேயிந்த
 நீச னேனுக்குங் காட்டினை யேயின்னங்
கூறு கொண்டவிக் கூடு விழுமுனங்
 கோதி லானந்த நிட்டையுந் தந்தருள்
நாறு கொண்ட வயற்பல வான்குடி
 வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 5.

பிணத்தைக் காத்திட்ட பேயென வாழ்ந்தின்பம்
 பெருகு செந்தமிழ்ச் சீர்மை யறிந்திடாப்
பணத்தைக் காத்திட்ட லோபர்கள் மேற்கவி
 பாடிக் காலத்தைப் பாழாக்கி டாமலெண்

---

3. கூட்டு—கூட்டம்; கூடு—உடல்; குளம்—நெற்றி; படைத்தி--படைத்தவனே! ஆட்டு—பஞ்சகிருத்தியநடனம்; ஆகு—பெருச்சாளி; மாடு—பொன்;

4. அரைப்பணம்—பெண்குறி; வரைப்பெண்—உமை; மரை--தாமரை.

5. கூறுகொண்ட— (சத்ததாதுக்களாகிய) கூறுபாட்டைப்பெற்ற நாறு—நாற்று

குணத்தைக் காத்திட்ட கோளின் புகழையே
கூடிப் பாடிமெய் நாடிடச் செய்குவாய்
மணத்தைக் காத்திட்ட மாபல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 6,

ஊனைத் தின்றுதம் மூனினை யோம்பிடு
முணர்வி லாத கயவ ருறவகன்
றூனைக் கன்றருள் செய்தோன் மருகனின்
னன்பர் கூட்டத்திற் றங்க வருளுவாய்
ஏனற் செந்நெல்கள் கன்னல்க ளென்னவும்
இலங்குங் கன்னல்க டன்னைக ளென்னவும்
வானத் தோங்கி வளர்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 7.

ஈனத் தொண்டர் கடற்றொண்ட னன்னவர்க்
கிழுக்குத் தொண்டுசெய் தேமாந்தி டாமனன்
மோனத் தொண்டர்க்குத் தொண்டு செயவிந்த
மூடத் தொண்டர்கு நீயருள் செய்வையோ
ஞானத் தொண்டர் நலயோகத் தொண்டர்கள்
நவிலுஞ் சற்கிரி யைத்தொண்ட ராகிய
வானத் தொண்டர்கள் சூழ்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 8.

ஊனுண் போர்க ளுறுந்தவ மென்னவும்
உயிர்கொ லாதவ ரொண்டவ மென்னவந்
தேனுண் டோங்கு மொழிச்சியர் தங்களின்
தேய்நு சுப்பைத் திரளந் தனத்தினை
மானென் றேங்க மருட்டுங்கண் ணேக்கண்டு
மயங்கி டாமனன் ஞான மருந்தருள்
வானின் றூருந் ததிபல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 9.

---

மணம்—மங்களம்.

ஊன்—புலால், உடல்; ஓம்பிடும்—வளர்க்கும்;

7. ஏனல்—ஏல்—நல்—ஏல்—பொருந்தும்; கன்னல்—கரும்பு.

8. கடறு—காடு; ஒண்டன்—நரி;

9. நுசுப்பு—இடை, ஊனுண்போர்க ளுறுந்தவ மென்னத்தேய் நுசுப்பு; உயிர்கொலாதவர் ஒண்டவ மென்னத் திரள்அம்தனம், என இயைத்துப் பொருள்கொள்க.

ஔவை யந்தமிழ் மாலைகொ டாளிலே
யறுகம் புல்லு மணிந்தனை யாதலாற்
பௌவ மார்குவி ஞன்சொலும் பாடல்கள்
பத்து மேற்றச்சம் பத்தும் விளைந்தருள்
குவ்வு ளோர்களுங் கோவி லுளோர்களுங்
கூடி வந்து பணிந்தருட் செல்வத்தை
வௌவி யேக வளப்பல வான்குடி
வாழ்கு மாரவி நாயக வள்ளலே. 10.

பலவான்குடிக் குமாரவிநாயகர் பதிகம் முற்றிற்று.

---

## அவையடக்கம்.

---

### நேரிசை வெண்பா.

குழறிக் குழறிக் குமரனைப்பா டென்ற
பழமொழியை நெஞ்சிற் பதித்து—மழலைமொழி
கொண்டியான் கூறுங் குமரபஞ்ச கந்தனைக்
கண்டியார் மெய்ப்புலவர் கள்.

---

10. பௌவம்—கடல்; கு—உலகம்; சம்பத்தும், என்ற இடத்துள்ள உம்மையை இறந்தது தழீஇய எச்சவும்மையாகக்கொள்க, அல்லது சம்மும் பத்தும் என்று கூட்டி, சம்—செல்வம், பத்து—தேவபத்தி. என்று பொருள்கொள்க. குவ்வுளோர் கள்—மண்ணுலகத்தார், கோவிலு

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வெற்றிவேலுற்றதுணை

# குன்றக்குடிக்

# குமரபஞ்சகம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

உலகமயக் கந்தீர்க் கொருசிவத்தைச் சார்ந்து
கலகமனப் பேய்க்குரங்கைக் கட்டிக்—குலவநினைக்
குஞ்சகத்திற் சீர்த்திபெற்ற குன்றக் குடிக்குமர
பஞ்சகத்திற் கைங்கரன்காப் பாம்.

## நூல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

உலகோர்க டொழுமிமயப் பிடியீன்ற மதகரிபின்
  னுதித்த வீரப்
பலயாரு மசுரவிபத் திரளையழி யாறுமுகப்
  பரசிங் கேற்றை
நலதேவர் தருமானைக் குறமானைக் கலந்துமகிழ்
  நமதம் மானை
மலைமேவு கிழவனைக்குன் றக்குடிவாழ் குமரனைநாம்
  வாழ்த்தி வாழ்வாம்.

பிடிப்பானை வேறெய்வப் பிடியானைக் கீரனுக்காப்
  பெலத்த குன்றம்
இடிப்பானை நமைத்துயரா விடியானைக் கடம்பலரா
  வியன்ற தாரை
முடிப்பானைக் கயவர்நண முடியானை யறுமீன்கள்
  முலைத்தீம் பாலைக்
குடிப்பானை யயர்குன்றக் குடியானை நமதுளத்திற்
  குடிவைத் துய்வாம்.

---

2. வேல்பிடிப்பானை என மாற்றுக; தெய்வப்பிடியானை-தெய்வயானையை உடையானை.

அடியானை யருணகிரிக் கடிப்பானை யாதவின்ப
மளித்த தெய்வப்
பிடியானைக் குறமகள்கைப் பிடிப்பானைக் கதிர்மணிகள்
பிறங்கு மாறு
முடியானை யெச்செயலு முடிப்பானை முனிவர்தொழு
மோலிக் குன்றக்
குடியானை யுமைதனப்பால் குடிப்பானை யுளமனையிற்
கூடி வாழ்வாம். 3.

ஞாயிறென மிளிர்முடியான் திங்களெனத் திகழ்முகத்தான்
நகுசெவ் வாயா
றேயுமொரற் புதனவ்வி யாழனிகர் திருக்குமொழி
யேலக் கூந்தல்
தோயுமுமை மகன்வெள்ளி டபத்தனருட் குருசனியாத்
தூய னென்றும்
மாய்தவிலாக் குகன்குன்றக் குடிக்குமா னெனதுளத்தில்
வதிவான் மன்னோ. 4.

திருச்செந்தின் முதலான தலம்போலென் னுளத்தலத்துஞ்
சிறப்பாத் தங்கி
அருட்செல்வந் தனைக்கொடுத்துன் னடிபோற்றம் பெருவா
ழ்வி லமைத்தா ளையா
உருச்செந்நெல் வாழையென வாழையெலாந் தென்னை
வோங்குஞ் செல்வம் [யென
இருக்கின்ற திருக்குன்றக் குடிக்கந்த கடுக்கண்டர்க்
கினிய தேவே. 5.

(குன்றக்குடிக் குமா பஞ்சகம் முற்றிற்று.)

---

3. அடியான், ஐ, அருணகிரிக்கு. எனப் பிரித்து அடியானாகிய அழகிய அருணகிரிக்கு, என்றும்; அடிபபால நையாத இன்பம், எனப் பிரித்து, திருவடியிடத்து உளதாவதாகிய கெடாத இன்பம், என்றும் பொருள் கொள்க.

4. "நவ்வியாழனிகர்" என்பதை நவ்வி, யாழ், அல், நிகர், என்று பிரிக்கவும்; நவ்வி—மான்; யாழ்—வீணை; அல்—இருள்; இம் மூன்றுக் கும் முறையே நிகராகிய திருக்கு, மொழி, கூந்தல், என இயைத்துப் பொருள் கொள்க; திருக்கு—கண்; வெள்இடபத்தன்—சிவபெருமான்: சனியாத்தூயன்—பிறவாத பரிசுத்தன்; இதில் எழுதினங்களும் வரிசை யாக வந்து சொல்லணியாக நிற்றல் காண்க.

5. கடுக்கண்டர்—சிவபெருமான்.